நேற்றுவரை கண்ணில் பூத்தபடி நின்று
நெஞ்சமதை வென்றாடினார்
நேர்ரெதிராய் வந்து தோழமையை சொல்லி
நெக்குருகி நின்றாடினார்
ஆற்றலர்களாகி கூற்றை எதிர்பார்த்து
அச்சமின்றி தேர் ஏறினார்
ஆலவிசம் தன்னை தாலியெனச்சூடி
அழகொளிர போராடினார்
தோற்று விழவில்லை சோதி நெருப்பாகி
தொட்டெமக்கு சுடேற்றுகிறார்
துயிலுமில்ல வாசல் தழுவி வரும் காற்றில்
சொந்தங்களை தாலாட்டுகிறார்
ஏற்றியொரு தீபம் பூச்சொறியும் நேரம்
எங்கிருந்தோ குரல் கேட்டிடும்
எங்களுடன் வந்து நின்றவர்கள் பேச
எம் விழிகள் நீர்கோர்த்திடும்

கல்லறைகள் வாழும் பிள்ளைகளே! உங்கள்
கனவுக்கு பூச்சூடுகிறோம்
காலநதி இன்னும் வேகம் எடுத்தாலும்
கரையாது போராடுகிறோம்
வல்லமைகள் தந்து வாழ்த்துரைத்து நின்று
வழிகாட்டும் குறியாகுவீர்
வையகமே ஒன்றாய் வந்தெதிர்த்த போதும்
வாசலிலே ஒளியாகுவீர்
உள்ளெரியும் எங்கள் உணர்வுகளின் முன்னே
உலகேழும் தலை சாய்த்திடும்
ஊர்முழுதும் கூடும் கார்த்திகைப் பூ நாளில்
உடல் மீது பலமேறிடும்
வில்லெடுத்த வீரம் வீழ்வதில்லையென்று
கல்லறையில் உறுதி எடுப்போம்
வீரர்களின் நாளில் வெந்து தணியாமல்
விடுதலைக்கு தேதி குறிப்போம்.

- புதுவை இரத்தினதுரை





# மாவீரர் எழுச்சி நாட்களின் நிகழ்வுகளும் நடைமுறை ஒழுங்குகளும்

1989 ஆம் ஆண்டில் நவம்பர் 27 ஆம் நாள் மாவீரர் நாளாகவும், 1990 ஆம் ஆண்டிலிருந்து 1994 ஆம் ஆண்டுவரை நவம்பர் 21ஆம் நாளிலிருந்து 27 ஆம் நாள்வரை மாவீரர் வாரமாகவும், தமிழீழ மக்களால் எழுச்சி நிகழ்வாக நடைபெற்றுவந்த தமிழீழ மாவீரர் எழுச்சி நிகழ்வுகள், 1995 ஆம் ஆண்டிலிருந்து நவம்பர் 25 ஆம் நாளிலிருந்து 27ஆம் நாள்வரை மூன்று நாட்கள் தமிழீழ மாவீரர் எழுச்சி நாட்களாகக் கடைப்பிடிக்கப்பட விருக்கின்றன.

தமிழீழ தேசியக் கொடி ஏற்றலுடன் மாவீரர் எழுச்சி நாள் ஆரம்பமாகும்.

## மாவீரர் நாள் தொடக்க நிகழ்வுகள்

01. சுடரேற்றல்
02. தேசியக் கொடியேற்றல்
03. மலர் வணக்கம்
04. அக வணக்கம்
05. உறுதியுரை
06. நினைவுரை

என்பன வரிசை ஒழுங்கில் மேற்கொள்ளப்படும். தொடக்க நிகழ்வுகள் மாவீரர் எழுச்சி நாட்களான மூன்று நாட்களிலும் நடைபெறும்.

**தேசியக் கொடி ஏற்றல்**

மாவீரர் எழுச்சி நாட்களுக்கான நிகழ்வுகள் நவம்பர் 25 ஆம் நாளன்று காலை 8.00 மணிக்கு தேசியக் கொடி ஏற்றலுடன் ஆரம்பமாகும்.

மாவீரர் துயிலும் இல்லங்களில் 25 ஆம் நாள் காலை 8.00 மணிக்கு ஏற்றப்படும் தேசியக் கொடி, நவம்பர் 27 ஆம் நாள் மாவீரர் நிகழ்வுகள் நிறைவடைந்த பின் இறக்கப்படும்.

இயக்கப் பணிமனைகள், தளங்களில் முதல் இரண்டு நாட்களிலும் மாலை 6.00 மணிக்கு கொடி இறக்கப்பட்டு மறு நாள் காலை ஏற்றப்படும். நவம்பர் 27ஆம் நாள் மாவீரர் நிகழ்வுகள் நிறைவடைந்த பின் இறக்கப்படும்.

பொது நிறுவனங்களிலும், பள்ளிகளிலும் ஒவ்வொரு நாளும் பணிமுடிந்த பின் பகல் 12.01 இன் பின்பாகவும், மாலை 6.00 மணிக்கு முன்பாகவும் தேசியக் கொடி இறக்கப்பட்டு, மறுநாள் காலையில் ஏற்றப்பட வேண்டும்.

(தேசியக்கொடி ஏற்றுதல், இறக்குதல் தொடர்பான கூடுதலான விளக்கங்கள் தேசியக் கொடிப் பயன்பாட்டு விதிக் கோவை என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.)

**நினைவொலி எழுப்பலும், சுடரேற்றலும்**

27 ஆந் திகதி சுடரேற்றும் நேரத்தை தமிழீழ மக்கள் அனைவரும் எதிர்பார்த்துக் காத்திருப்பர். மாலை 6.05 மணிக்கு தமிழீழ மெங்கும் சமகாலத்தில் அனைத்து ஆலய, தேவாலய மணிகளும் ஒரு மணித்துளி நேரம் ஒலி எழுப்பும். அந்த நேரத்தைத் தொடர்ந்து எல்லா மக்களும் அகவணக்கம் செலுத்துவார்கள்.

துயிலுமில்ல மைதான நடுவில் - பீடத்தில் சற்று உயரமான பெரிய சுடர் நாட்டப்பட்டிருக்கும். மக்கள் வெள்ளம் உணர்வுக் கொந்தளிப்போடு, மைதானத்தைச் சுற்றி நின்று தியாகங்களை நெஞ்சில் நினைத்திடத் தீச்சுடர் ஏற்றப்படும். அமைப்பின் முதன்மையானவர்கள் மத்திய சுடரை ஏற்ற, மாவீரரின் பெற்றோர், உரித்துடையவர்கள் தீச்சுடரை சமகாலத்தில் ஏற்றுவர். சமகாலத்தில் ஒவ்வொரு இல்லங்களிலும், வாசலிலும் மாவீரரின் சுடரொளியை அனைவரும் ஏற்றுவர்.

சுடரானது சுவாலை விட்டெரியும். ஒவ்வொரு சுடர்களிலும் மாவீரர்களின் முகங்கள் பிரகாசிக்கும். தமிழீழம் முழுவதும் சுடரொளி ஓங்கிப் பரவும். மக்கள் குமுறி எழுந்து கண்ணீர்விட்டு நிற்க, தியாகிகளின் காவியங்கள் ஒவ்வொரு தமிழீழ மக்கள் உணர்வுகளிலும் மீட்டப்படும்.

சுடரேற்றி, தியாக தீபங்கள் இவை என்று கூறத்தக்கதாக நினைவுகூரப்பட வேண்டும். வானத்தில் மின்னும் நட்சத்திரங்கள் போல தமிழீழமெங்கும் மாவீரர் சுடர்கள் இந்நேரத்தில் எங்கும் ஒளிர வேண்டும். சிட்டி விளக்கேற்றக்கூடிய இடங்களில் தொகையான சிட்டி விளக்குகள் ஏற்றி நினைவுகூரலாம். வாசலில் தீப்பந்தங்கள் ஏற்றியும், பொது இடங்களில் பெரிய சுடர்களை ஏற்றியும் நினைவுகூர வேண்டும். இந்த சுடரேற்றும் நிகழ்வானது விடுதலைப் பாதைக்கு உறுதியையும், உணர்வையும் கொடுத்து நிற்கின்றது.

## மாவீரர் நாள் இரவு நிகழ்வுகள்

**தேசியத் தலைவர் அவர்களின் மாவீரர் நினைவுரை**

இன்று மாலை 6.05 மணிக்கு ஒலி எழுப்பும் நிகழ்வு தொடங்கக் கூடியதாக, தேசியத் தலைவர் அவர்களின் மாவீரர் நினைவுரை நிகழ்வு இடம்பெறும்.

**நினைவொலி எழுப்புதல் (6.05 மணி)**

தேசியத் தலைவர் அவர்களின் மாவீரர் நினைவுரை நிறைவடைந்தவுடன் உடனடியாக 6.05 மணிக்கு அனைத்து வழிபாட்டிடங்களிலும் மணி ஒலி ஒரு மணித்துளி நேரம் எழுப்பப்படும். உயிர்காப்புப் பணியில் ஈடுபடும் ஊர்திகள் தவிர, ஏனைய அனைத்து ஊர்திகளும் நிகழ்ச்சி தொடங்குவதற்கு ஏற்ற வகையில், நிறுத்தப்பட்டு அமைதி பேணப்படல் வேண்டும்.

**அக வணக்கம் (6.06 மணி)**

மாவீரர்களுக்கான நினைவொலி நிறுத்தப்பட்டவுடன் 6.06 மணிக்கு மாவீரர்களுக்கான ஒரு மணித்துளி அக வணக்கம் செலுத்தப்படும். இந்நேரம் இல்லங்களிலும், ஏனைய இடங்களிலும் இருக்கும் தமிழீழ மக்கள் எழுந்து நின்று மாவீரர்களை நினைவில் நிறுத்தி அகவணக்கம் செலுத்துதல் வேண்டும்.

**ஈகைச் சுடரேற்றுதல் (6.07 மணி)**

அகவணக்கம் நிறைவுற்றதும், 6.07 மணிக்கு ஈகைச்சுடர் ஏற்றப்படுதல் வேண்டும். (மாவீரர்களின் பெற்றோர், அவரவர் சுடரேற்ற வேண்டிய கல்லறைகள், நினைவுக் கற்களுக்கு முன்னால் 5.45 மணிக்கு நிற்கக்கூடிய வகையில் அனைத்து ஒழுங்களும் மேற்கொள்ளப்பட்டிருக்கும்.)

மாவீரர் துயிலுமில்லங்களிலுள்ள மாவீரர் கல்லறைகள், நடுகற்கள் முன் மாவீரர்களின் பெற்றோர், குடும்பத்தனர், அதே நேரம் மாவீரர் துயிலுமில்லங்களில் இடம்பெயர்ந்த மாவீரர் பெற்றோர்கள் அவர்களுக்கென ஒழுங்கு செய்யப்பட்ட இடங்களில் ஈகைச்சுடர் ஏற்றுவர்.

இவை தவிர, துயிலுமில்லங்களுக்கு வராதபோது மக்கள் தமது இல்லங்கள், பொது இடங்கள், அலுவலகங்கள், விளையாட்டு இடங்கள், தொழிற்சாலைகள் போன்ற இடங்களில் உரிய நேரத்தில் உரிய முறைப்படி ஈகைச்சுடரேற்றுவர். ஈகைச் சுடரேற்றும்போது மாவீரர் பாடல் ஒலிக்கப்படும். (மாவீரர் ஈகைச் சுடர் ஏற்றப்படும் நேரத்தில், அதன் நோக்கத்தைப் புரிந்து கொள்ளாது. வீதிகளில் ரயர்களை எரிப்பதோ அல்லது வேறு வகையில் ஒளி உருவாக்குவதோ தவிர்க்கப்படல் வேண்டும்.)

- தமிழீழ மாவீரர் பணிமனை.

• • • • •

## மாவீரர் எழுச்சி நாட்கள் 25 -27

ஆரம்ப நாள் காலை 8.00மணிக்கு தேசியக் கொடி ஏற்றத்தைத் தொடர்ந்து மாவீரர் எழுச்சி நாட்கள் கொண்டாட்டம் ஆரம்பமாகும். தமிழீழம் முழுவதும் எழுச்சிக் கோலம் பூண்டு பொலிவுடன் விளங்கும். அனைத்துத் தமிழீழ மக்களும் அலங்கரிப்பு நிகழ்ச்சியிலும், வீரவணக்க நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்வார்கள். வேறு களியாட்டங்கள், கொண்டாட்டங்கள் நடைபெறமாட்டாது. தேவையற்ற கேளிக்கைகள், வேண்டத்தகாத சூழ்நிலைகள் மறைந்துவிடும். மதுச்சாலைகள் மூடப்பட்டு மது பாவிப்பதை நிறுத்திவிடுவார்கள். வீடுகள் தோறும் விடுதலைக் கீதங்கள் ஒலிக்கும். மக்கள் பிரிவு பிரிவாக, அமைப்புக்கள் ரீதியாக ஆக்கபூர்வ வேலைத் திட்டங்களிலும் மற்றும் மாவீரர் நாள் நிகழ்வுகளிலும் கலந்து கொள்வர்.

**பாடசாலைகள்**

ஆசிரியர்கள் மாவீரரின் மாண்பினையும், மாவீரர் நாளின் மகிமையையும் மாணவர்களுக்கு முன்கூட்டியே தெளிவினை ஏற்படுத்துவார்கள். பாடசாலைகள் அலங்கரிக்கப்பட்டிருக்கும். நவம்பர் 25 ஆம் நாள் காலை 9.00 மணிக்கு தேசியக் கொடி ஏற்றலும், பாடசாலைகளில் வீரவணக்கக் கூட்டங்கள், கலைநிகழ்ச்சிகள் நடைபெறும். மாவீரர் நினைவாக சமூக சேவைகளிலும் ஈடுபடுவர். மாவீரருக்கு மலர் வணக்கம் செலுத்தும் பணியினை மாணவர்கள் பொது மக்களும் பொது நிறுவனங்களும் முழுமையாக இணைவதில் தேசியப்பற்று உரமேற்றப்படுகிறது.

**தமிழீழ மாவீரர் நாள் நவம்பர் 27**

தமது இன்னுயிரை ஈந்து, தமிழீழ விடுதலைப் போருக்கு வீறுசேர்த்த மாவீரர்கள் அவர்களின் தலைமுறையிலேயே போற்றப்பட வேண்டும். அவர்களின் வீரங்களும், ஈகங்களும், அருஞ்செயல்களும் மக்களிடம் எடுத்துச் சொல்லப்பட வேண்டும். அந்த மாவீரர்களின் பெற்றோர்களும், குடும்பத்தினர்களும் அவலப்படக் கூடாது என்ற நோக்கின் அடிப்படையில் எமது தலைவரின் எண்ணத்திலிருந்து உருவானது தான் மாவீரர் நாள்.

தொடர்ச்சி 04ம் பக்கம் பார்க்க

## 03ம் பக்கத் தொடர்ச்சி...

தமிழீழ விடுதலைப் போருக்கு இன்னுயிரை ஈந்து உரமாகிப்போன மாவீரர்களின் எண்ணிக்கை பத்து, நூறு என்ற நிலை மாறி, ஆயிரக் கணக்காக உயர்ந்துவிட்ட நிலையில், ஒவ்வொரு மாவீரரையும் தனித்தனியாக ஆண்டுதோறும் அவரவர் நிறைவு நாட்களில் நினைவுகூர இயலாது என்ற நிலையில் அனைவரையும் ஒரே நாளில் நினைவுகூரக்கூடியதாக, தமிழீழ விடுதலைப் போரில் முதல் களச் சாவடைந்த எமது இயக்க வீரர் லெப்ரினன்ட் சங்கரின் (சத்தியநாதன்) நினைவு நாளான நவம்பர் 27 ஆம் நாளை, பொதுவான நாளாகத் தேர்ந்தெடுத்த எமது தலைவர் 1989 ஆம் ஆண்டில் தமிழீழ மாவீரர் நாளை அறிவித்தார்.

விடுதலைப் போராட்டத்தில் உலகம் வியக்கும் வகையிலே புதிய வரலாறு படைத்து புதுமை சேர்த்து நிற்கும் எமது தேசியத் தலைவர் மேதகு வே.பிரபாகரன் அவர்கள், மணமீட்புப் போரிலே பல வெற்றிகளைக் குவித்துவரும் அதே நேரம். நாட்டை எல்லாத் துறைகளிலும் கட்டியெழுப்புவதற்கான திட்டங்களைத் தீட்டி வழிகாட்டி இயங்கி வருவதோடு, தூய்மையான தேசிய விடுதலைப் போரை வீறோடு நடாத்தி, வீரச்சாவைத் தழுவிய மாவீரர்களைப் போற்றி நினைவில் நிறுத்தவும், அவர்களது பெற்றோரும் குடும்பத்தினரும் அல்லலுறும் நிலையை மாற்றவும் எனப் பல்வேறு திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்திவருகின்றனர்.

1989 ஆம் ஆண்டு நவம்பர் 27 ஆம் நாளை முதலாவது தமிழீழ மாவீரர் நாளாகத் தமிழீழம் உணர்வார்ந்த நிலையில் கடைப்பிடித்தது. அன்றிலிருந்து தமிழீழத்தின் மிகப்பெரிய நிகழ்வாக தமிழீழ மாவீரர் நாள் தமிழீழ மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.

ஏனைய நாடுகளி மாவீரர் நாள் கடைப்பிடிக்கப்படுவதற்கும், தமிழீழம் மாவீரர் நாளைக் கடைப்பிடிப்பதற்கும் பெரும் வேறுபாடுகளுண்டு. ஏனைய நாடுகள் எல்லாம் விடுதலைக்குப்பின் அமைந்த அரசுகளால் விழா எடுக்கப்படுகின்றனவே தவிர, போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் காலங்களில் விழாக்கள் எடுக்கப்படுவதில்லை. ஆனால், விடுதலைப் போராட்டம் வீறோடு நடைபெற்றுக் கொண்டிருக்கும் நிலையிலும், எதிரியின் அச்சுறுத்தல்கள், தாக்குதல்களுக்கிடையிலும் பல்வேறு நெருக்கடிகளுக்கிடையிலும் போராட்டத்தையும் நடாத்திக்கொண்டு, தமிழ் மக்கள் மண்ணின் விடிவுக்காகத் தம் இன்னுயிரை ஈய்ந்த மாவீரர்களை எழுச்சியோடு நினைவுகூர்ந்து வருகின்றனர்.

வீரச்சாவடையும் தமிழீழ மாவீரர்களது வித்துடல்கள் மாவீரர் துயிலுமில்லங்களில் கல்லறைகளில் விதைக்கப்பட்டு, நடுகற்கள் நாட்டப்பட்டு, வழிபாடியற்றப்படுகின்றன. மாவீரர் நாளில் மாவீரர்களின் பெற்றோர், குடும்பத்தினர் மாவீரர்களை நினைவுகூரும் நிகழ்வுகளில் கலந்து கொள்வதற்காக எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுக்கப்பட்டு, அன்று தமிழீழ மக்களால் போற்றி மதிப்பளிக்கப்படுகின்றனர். உலகில் எங்குமே தமிழீழ மாவீரர் நினைவுபோல மாவீரர்களை நினைவுகூரும் நிகழ்வுகள் அவர்களின் பெற்றொரும், குடும்பத்தினரும் போற்றப்பட்டு, மதிப்பளிக்கப்படும் நிகழ்வுகள் நடைபெற்றதாகவோ, நடைபெறுவதாகவோ வரலாறில்லை.



# மாவீரர் பாடல்

### உறுதிமொழி

மொழியாகி, எங்கள் மூச்சாகி, நாளை
முடிசூடும் தமிழ்மீது உறுதி.
வழிகாட்டி, எம்மை உருவாக்கும் தலைவன்
வரலாறு மீதிலும் உறுதி.
விழி மூடி இங்கே துயில்கின்ற வேங்கை
வீரர்கள் மீதிலும் உறுதி.
இழிவாக வாழோம், தமிழீழப் போரில்
இனிமேலும் ஓயோம் உறுதி.

### பாடல்

தாயகக் கனவுடன் சாவினைத் தழுவிய
சந்தனப் பேழைகளே! – இங்கு
கூவிடும் எங்களின் குரல்மொழி கேட்குதா?
குழியினுள் வாழ்பவரே!
உங்களைப் பெற்றவர் உங்களின் தோழிகள்
உறவினர் வந்துள்ளோம் – அன்று
செங்களம் மீதிலே உங்களோடாடிய
தோழர்கள் வந்துள்ளோம்.

எங்கே! எங்கே! ஒருதரம் விழிகளை
இங்கே திறவுங்கள்.
ஒருதரம் உங்களின் திருமுகம் காட்டியே
மறுபடி உறங்குங்கள்.

வல்லமை தாரும் என்று
உங்களின் வாசலில்
வந்துமை வணங்கிநின்றோம்

உங்கள்
கல்லறை மீதிலெம் கைகளை வைத்தொரு
சத்தியம் செய்கிறோம்

வல்லமை தாரும் என்று
உங்களின் வாசலில்
வந்துமை வணங்கிநின்றோம்

சாவரும் போதிலும் தணலிடை வேகிலும்
சந்ததி தூங்காது – எங்கள்
தாயகம் வரும் வரை தாவிடும் புலிகளின்
தாகங்கள் தீராது.

(எங்கே, எங்கே.....)

உயிர்விடும் வேளையில் உங்களின் வாயது
உரைத்தது தமிழீழம் – அதை
நிரை நிரையாகவே நின்றினி, விரைவினில்
நிச்சயம் எடுத்தாள்வோம்
தலைவனின் பாதையில் தமிழினம் உயிர்பெறும்
தனியர(சு) என்றிடுவோம் – எந்த
நிலைவரும் போதிலும் நிமிருவோம், உங்களின்
நினைவுடன் வென்றிடுவோம்.

(எங்கே, எங்கே....)

- புதுவை இரத்தினதுரை



# தாய்மையின் பெருமை உணர்த்திய மைந்தர்கள்

- ஜ.சங்கர்

அன்பின் உறைவிடமே அன்னை. அவள் ஐயிரண்டு மாதங்கள் எம்மைச் சுமந்து பெற்றெடுத்து பாலூட்டி, சீராட்டி, பாராட்டி சிறப்புடன் வளர்த்து சிறந்த பண்பாலனாக மாற்றி வளர்த்து வாழ வைப்பவள் அன்னை. அன்னையின் அன்பினை அளவிட முடியாது. தன் குழந்தை நன்றே செய்தாலும் தீதே புரிந்தாலும் அதனை பொறுமையுடன் ஏற்று பொறுமையின் உறைவிடமாக விளங்குகின்றாள். பத்து மாதங்கள் சுமந்து பிரசவிக்கும் போது தாயானவள் தாங்கொணாத்துயரில் மூழ்கி குழந்தையை பிரசவிக்கிறாள். இந்நிலையில் தாயான வள் இறந்து மீண்டும் உயிர்கிறாள் இதனால் தான் பிரசவம் என்ற பெயர் ஏற்பட்டது. இவ்வாறு தாயின் நிலை அறிந்த அறிஞர்கள்கூட தாயை ஒரு சிறந்த கோயிலாக கண்கண்ட தெய்வமாக போற்றி மதிப்பளித்தல் வேண்டும் என்று கூறுகின்றார்கள்.

"ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனை
சான்றோன் என கேட்ட தாய்"

தாயானவள் தான் பெற்ற பிள்ளையை நல்ல கல்வி அறிவுள்ள அறிஞர்கள் அவன் பிறப்பு பற்றி கூறும் போது அக்கணப்பொழுதில் தாயானவள் அடைகின்ற பேரின்பம் சொல்லில் அடங்காது. ஒரு பெண் தான் தாய்மை அடையும் போது அவளிடம் பரி பக்குவம் அனபு, கருணை, இரக்கம் போன்ற உயரிய பண்புகள் தன்னகத்தே வளர்கிறது. இதனால் தாயானவளின் பொறுமை பூமியின் பொறுமையிலும் பார்க்க பன்மடங்கு அதிகரிக்கின்றது.

பூமியில் நாம் பல வித செயற்பாடுகளை செய்கின்றோம் தேவையற்ற அசுத்தங்களை புதைக்கின்றோம், எரிக்கின்றோம், வெட்டுகின்றோம், கொத்துகின்றோம் இன்னும் பல இன்னோரன்ன செயல்களை செய்கின்றோம் இவ்வாறான நிலையில் பூமி அவற்றைப் பொறுத்துக் கொள்கின்றது. இதே போன்று தான் தாயும் தான் பெற்ற பிள்ளைகள் செய்கின்ற செயல்கள் எல்லாவற்றையும் பொறுமையாக ஏற்று பொறுமையை கடைப்பிடிக்கிறாள். இதனால் தான் ஒரு நாட்டை தாய்நாடு என்றும் தாய்மையின் பெருமையை விளக்குவதற்கு ஏற்ற கருப்பொருளாகக் கொண்டு தாயகம் என்ற உயரிய உன்னதமான சொற்பிரயோகங்கள் கையாளப்பட்டன.

இதன் மூலம் நாம் தாய்க்கு அளிக்கின்ற மரியாதையை தாய் நாட்டுக்கும் அளித்தல் வேண்டும். இதன் வழித்தோன்றலில் பிறந்த சீறிய சொற்பிரயோகம் தான் தாயகம். தாயையும் தாய் நாட்டையும் நேசிப்பவன் நல்ல பண்பாளனாகவும் பகுத்தறிவாளனாகவும் திகழ முடியும்.

தாய் நாட்டின் விடுதலைக்காக தன்னுயிரை மாய்த்து மாவீரர்களாக இம்மண்ணில் என்றும் அமரத்துவம் பெற்று மக்களோடு மக்களாக வாழ்ந்து வருகின்ற மாவீரர்கள் தாயின் பெருமையையும் தாய் நாட்டின் பெருமையையும் உணர்த்திச் சென்றவர்கள். தமது ஆசைகள், கனவுகள் அனைத்தையும் துறந்த தியாகிகள். தாய்க்கும் தாய்நாட்டிற்கும் பெருமை சேர்த்த பெரு வீரர்கள் இப் பெருவீரர்களின் பெருமையினை பார் போற்றும் பெருநாளாக தாயகம் எங்கனும் கொண்டாடப்படுகிற மகத்தான நாள் மாவீரர் நாள்.

தாயானவள் தான் பெற்ற மைந்தன் தாய்நாட்டின் விடுதலைக்காக தன்னுயிரை மாய்த்து மாவீரன் ஆன பெருமையிலும் வேறு எப்பெருமையும் உயர்வானதன்று. தாய்க்கு அன்பு, கருணை, இரக்கம், சகிப்புத் தன்மை போன்ற எல்லா நற்பண்பு களும் இருந்தாலும் அவளிடம் அதிகம் காணப்பட வேண்டி யது வீரம். வீரம் மிகந்த மைந்தர்களைப் பெற்ற அன்னையர் கள் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற பெண்மைக்குரிய நற்குணங்களையும் தன்னகத்தே கொண்டு வீரம் செறிந்த வீரமிகு மைந்தர்களை பெற்றெடுத்த அவதாரத் தெய்வங்கள் என்ற போற்றுதல் வேண்டும்.

வீரத்தின் விளை நிலம் எவர்க்கும் மண்டியிட்டு வாழாது. நல்ல விளைநிலத்தில் சீறிய பயிர்கள் செழிப்புடன் வளரும் அதுபோல் விளையும் பயிரை முளையிலே தெரியும். என்ற கூற்றுக்கள் வீரத்தாயின் வயிற்றுப் பிறந்த தம் குழந்தைகளின் வீரதீரச் செயல்கள் மகிழ்ச்சியை தருவன. தான் பெற்று சீராட்டி, பாராட்டி வளர்த்த மைந்தன் மாய்ந்து மறைந்த போது அக்காலத்தில் அவள் அடையும் வேதனை சொல்லொனாத் துயர். அவன் பார் போற்றும் மாவீரன் என்று கேட்ட மாத்திரத்தில் அவள் அடையும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அது மட்டற்ற மகிழ்ச்சி.

"களர் நிலத்துப் பிறந்த உப்பினை சான்றோர்
விளை நிலத்து நெல்லினும் விழுமியதாகக் கொள்வர்"
"கடை நிலத்தோராயினும் கற்றறிந்தோர்
தலை நிலத்தே வைக்கப்படும்."

அதாவது சேற்று நிலத்திலே பிறந்த உப்பை விளை நிலத்தில் பிறந்த நெல்லைவிட உயர்வாக கருதுகின்றோம். அது போன்று தாயின் பெருமையையும் தாய்நாட்டின் பெருமையையும் வெளியுலகிற்கு வெளிப்படுத்தும் பொருட்டு வீறுகொண்டு எழுந்து வீரமரணம் அடைந்த மாவீரர்கள் நல்ல வீரமுள்ள தாயின் வயிற்றுப் பிறந்த வீரபுருசர்கள்.

தாழ்ந்த இடத்தில் பிறந்தாலும் தன் செயற்கரிய செயலின் மூலம் உயர்ந்த இடத்தை பிடித்த உத்தமர்கள். இவ்வாறான உத்தமர்கள் வாழ்கின்ற மண்ணிலே வயல் புலங்கள் விளைவதைவிட வீரம் விளைந்த மண் என போற்றும் அளவிற்கு வீரத்திற்கு வீரம் சேர்த்த வீர புருசர்கள் வாழ்கின்ற பெருமையுடையது.

தாய்க்கும் சேய்க்கும் இடையே ஏற்படுகின்ற நெருக்கமான பிணைப்பு போன்று தாய் நாட்டுக்கும் அம் மண்மீது வாழ்கின்ற மானுடர்க்கும் ஏற்பட வேண்டும். அது ஏற்படுமாயின் மானுடப் பிறவியின் மகத்துவம் உணர்ந்து தாயின் மீது கொள்ளுகின்ற அன்பு, பண்பு, பாசம் நேசம், பணிவு போன்ற பரிவுள்ள பண்புகள் அனைத்தும் தாய் மண்ணின் மீதும் ஏற்படும். இதன் வழி தாய் நாட்டைக் காக்கும் தனையர்கள் பலர் எழுவார்கள். சரித்திரம் படைத்து மண்ணில் பிறந்ததன் பெருமை உணர்த்தி வாழ்வாங்கு வாழும் காலம் வரும்.

ஒரு மனிதன் மண்ணில் பிறக்கின்ற போது அவனுடைய வாழ்வியலில் செய்கின்ற செயல்கள் மூலம் வெளிப்படையாகும். அவன் வாழ்கின்ற காலத்தில் என்ன விடயங்களை செய்திருக்கிறான் என்ற வினாவை எழுப்பக் கூடியவாறு வாழ்ந்திருக்க வேண்டும். அப்பொழுது தான் அவன் வாழ்ந்ததன் பெருமை புலப்படும். உலகம் போற்றும் இறந்த பின்னும் இறவா நிலையாகிய அமரத்துவம் அடையலாம். அதாவது மக்களின் மனங்களிலே வாழலாம். இவ்வாறான வாழ்க்கைக்கு ஆதார மூலசக்தியாக விளங்குபவள் அன்னை அவள் தன் இரத்தத்தை பாலாக்கி வீரத்துக்கு உரமூட்டி வளர்க்க வேண்டும். இதன் வழி தாய்க்கும் சேய்க்கும் உள்ள நெருக்கமான பிணைப்பு தெளிவாகும்.

இன்றைய உலகில் அன்னையர் தினம் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் தான் நல்லவனோ அல்லது தீயவனோ அவன் எப்படிப்பட்டவனாக இருப்பினும் தன்னைச் சுமந்து பெற்ற அன்னையை நினைவு கூறுதல் வேண்டும். என்பதற்காகவே அன்னையர் தினம் உருவாக்கப்பட்டது. அது போன்று அன்னை மண் விடுதலைக்காக மரணித்த மாவீரர்களின் நினைவு நாள் மாவீரர் நாள் மகத்தான தாயானவள் தம்மைந்தரின் வீரதீரச் செயல்களை வியந்த மனமாற வாழ்த்தி வணங்கும் நாளில் ஊர் முழுதும் விழாக்கோலம். சோகம் என்ற இருட்டை ஒழித் சுகபோகங்களை மறந்து சொந்தங்கள் சுகமாக வாழ தம்மை மாய்த்த மைந்தர்களின் நிலையினை நினைவு கூர்ந்து வருந்துகின்ற தாய்மையின் பெருமையும் தாய் மண்ணுக்காக தம்முயிர் ஈந்த தாயாளர் களின் பெருமையும் சிறப்புடையது.



### விடுதலைப் புலிகளின் முதலாவது மாவீரன் லெப்.சங்கர்

தமிழீழ விடுதலைப போராட்டத்தின ஆரம்பகால கட்டத்தில், இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்ட சங்கர், வடமராட்சியைச் சேர்ந்த கம்ப் மலையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆரம்பகாலத் தாக்குதல் பலவற்றில், மிகவும் துடிப்புடன் செயல்பட்டவர். 1982ஆம் ஆண்டு சிறிலங்கா இராணுவத்தினருடனான மோதலில் படுகாயமுற்ற சங்கர் 27.11.1982 இல் வீரச்சாவடைந்தார். முதற் களப்பலியான சங்கரின் நினைவுநாளே மாவீரர் நாளாக கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.



### வீரத்தின் விருட்சமாய் விழுதாகிப்போன மாலதி

1967ஆம் ஆண்டு தைமாதம் 4ஆந் திகதி சகாயசீலி என்ற பெயருடன் விவசாயக் குடும்பத்தில் பிறந்தார் மாலதி. தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் பெண் வீராங்கனைகளில் முதற் களப்பாலியான 2ஆம் லெப்.மாலதியின் வீரச்சாவும் புதிய சகாப்தம் ஒன்றைப் படைத்தது.



### கரும்புலி கப்டன் மில்லர் ஒருசகாப்தத்தின் ஆரம்பம்!

1987 ஜூலை 5 ஆந் திகதி நெல்லியடி மகாவித்தியாலயத்தில் அமைந்திருந்த சிங்களப் படை முகாமை நோக்கி தனியொருவனாக வெடிமருந்தேற்றிய வாகனத்தில் சென்று முற்றாக் தகர்த்து, நூற்றுக்கணக்கான படையினரை அழித்து கரும்புலிகள் சகாப்தத்தின் முதலாவது போராளியாகக் கப்டன் மில்லர் தனது இன்னுயிரை ஈகம் செய்தார்.

# மாவீரர்கள் மாண்புகழ் என்றுமே மங்காது

- முரளிமாறன் -



எங்கள் தேசிய விடுதலைப் போராட்டம் பல அற்புதமான சாதனைகளைப் புரிந்துள்ளது. எமது மாவீரர்களின் மகத்தான சாதனைகள் அவர்களுக்கு மாண்புகழைப்பெற்றுக் கொடுத்த தோடு எமது தேசிய விடுதலைப்போரின் அச்சாணியாகவும் இருந்து வருகின்றன.

ஒவ்வொரு குழந்தையும் குடும்பத்தின் சொத்து. ஒரு போராளியானவன் அவனது இயக்கத்தின் சொத்து. அவன் மாவீரன் ஆகிவிட்டால் மக்களின் சொத்து. மாவீரர்கள் யார் என்பது பற்றி தேசியத் தலைவர் அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"எமது வீரர்களின் சாவுகள் எமது சரித்திரத்தையே இயக்கும் உந்துசக்தியாக எமது போராட்டத்தின் உயிர் மூச்சாக எமது போராளிகளின் உறுதிக்கு உத்வேகம் அளிக்கும் ஊக்க சக்தியாக அமைந்து விட்டன"

எங்கள் மாவீரர்கள் அன்று ஏற்றிவைத்த விடுதலைச் சுடர் இன்று வியாபகமடைந்து அவனியெல்லாம் தீபமாக ஒளி வீசு கின்றது. பாலஸ்தீனத்தைச் சேர்ந்த அரபு மொழிபேசும் போராளிக் கவிஞன் ஒருவன் மரணித்து விட்ட தனது உற்ற தோழன் பற்றிக் கவிதை பாடும்போது தான் காட்டில் அலைந்து ஆற்றில் நீர் அள்ளிக் குடிக்கும்போது நீரில் நெளி யும் தன் நிழலில் கூட மரணித்த தனது தோழனின் உருவத் தையே காண்பதாகக் கூறுகின்றான். இது எங்கள் விடுதலைப் போராட்டத்திற்கும் பொருந்தும். மண்ணுக்காக மரணித்த தனது தோழனின் இழப்பைச் சுமக்கும் ஒரு போராளிப் பாடலாசிரியன் தனது உற்ற தோழனை நினைந்து "நெஞ்சம் முழுதும் நீயே என் நினைவும் முழுவதும் நீயே காணும் காட்சி யாவும் நீயே" என உள்ளம் நெகிழப் பாடியுள்ளான். அந்த வைர வரிகள் எங்கள் உறுதிக்கு மேலும் உரமூட்டு பவையாகவுள்ளன.

## முதல் மாவீரர்களின் அர்ப்பணிப்பும் அசைவியக்கமும்

1976 ஆம் ஆண்டு விடுதலைப்புலிகள் அமைப்பு ஸ்தா பன மயப்படுத்தப்பட்டு தாயக விடுதலைப் போரை முன்னெ டுத்த வேளையில் அந்த வேள்வித் தீயில் ஆகுதியான முதல் மாவீரன் லெப்ரினன். சங்கரின் (செல்வச்சந்திரன் சத்திய நாதன்-கம்பர்மலை) உயிர்த்தியாகம் ஆதர்சமாயிற்று. அந்த ஒளிப்பிரவாகம் தமிழர் தாயகம் எங்கும் வியாபகமானபோது அது தமிழ் இளைஞர் நாடிநரம்புகளில் விடுதலை வேட்கை யைப் பிரசவித்தது. தமிழ் பேசும் மக்களின் உள்ளங்களில் உணர்ச்சிப் பிளம்புகளை உருவாக்கியது. அதுவே இயங்கு திசையின் முன்னோக்கிய அசைவியக்கமாகியது. காலச்சக் கரம் சுழன்று சென்றபோது தமிழர் விடியலுக்கு கனத்த செய்தி சொன்னது.

## தமிழீழத் தாயகத்தில் எங்கள் புரட்சி மனிதர்கள்

தமிழர் தாயகத்தின் தலைநகர் திருமலை மண் பெற் றெடுத்த நீந்தமிழ் வீரன் லெப்.சீலன் (சாள்ஸ்அன்ரனி லூக்காஸ்) விடுதலைப்புலிகளின் முதல் தாக்குதல் பிரிவுத் தலைவனாவான். இவனது தன்னலமற்ற உழைப்பும் தியாக மும் இயக்க இரகசியங்களைக் காக்க மரணத்தின் விளிம்பில் நின்றபோதும் அவன் காட்டிய உறுதிப்பாடும் தியாக உணர் வும் அவற்றைக் கேட்போர் நெஞ்சை நெகிழவைத்தன. இதன் விளைவாக அவன் தடம் பதித்து ஆயிரக் கணக்கில் இளை யோர் சமுதாயம் அணிதிரண்டது. தமிழ்த்தேச விடுதலைக் கான பலமான இராணுவக் கட்டமைப்பு தோற்றுவிக்கப்பட் டது. படிப்படியாக உறுதியாக வளர்ச்சிபெற்ற விடுதலைப் புலிகள் பொலிஸ் நிலையங்களையும், இராணுவ மினிமுகாம் களையும், இராணுவ பொலிஸ் கூட்டுப்படை முகாம்களையும் தாக்கியழிக்கக் கூடிய பலத்தைப் பெற்றார்கள். இந்தத் வளர்ச்சிக் கட்டத்தின் ஒருபடி நிலையே 22.09.1984 அன்று மட்டக்களப்பு களுவாஞ்சிக்குடி பொலிஸ் நிலையம் மீதான தாக்குதல் ஆகும். இந்த தாக்குதலின்போது பொலிஸ் நிலைய ஆளணிக்கும் கட்டடங்களுக்கும் சேதத்தைப் போராளிகள் ஏற்படுத்தினார்கள். இத்தாக்குதலின்போது இரண்டு போராளி கள் வீரச்சாவைத் தழுவிக்கொண்டனர். ஒருவர் லெப். ராஜா (இராமலிங்கம் பரமதேவா) மற்றவர் வீரவேங்கை. ரவி (தம் பையா வாமதேவன்) இவர்களே மட்டக்களப்பு மாவட்டத்தில் வீரச்சாவடைந்த முதல் மாவீரர்கள் ஆவார்கள். இவர்களது தியாகம் கிழக்குப் பிராந்தியம் எங்கும் விடுதலை உணர்வுக்கு மேலும் உர மூட்டியது. தமிழ்பேசும் இளைஞர் சமூகத்தின் மத்தியில் போராட்டத்தின் ஈர்ப்புச் சக்தியாக இவர்களது உயிர்த்தியாகம் வடிவம் பெற்றது. இவ்விடத்தில் ஒரு மாவீர னின் சாவு பற்றி நமது தேசியத்தலைவர் அவர்கள் கூறிய ஒரு வாசகம் மிகப் பொருத்தமாகவுள்ளது. அவரது கூற்றுப் பின்வருமாறு:

"ஒரு விடுதலை வீரனின் சாவு ஒரு சாதாரண மரண நிகழ்வல்ல. அந்தச் சாவு ஒரு சரித்திர நிகழ்வு. ஒரு உன்னத இலட்சியம் உயிர் பெறும் அற்புதமான நிகழ்வு. உண்மையில் ஒரு விடுதலை வீரன் சாவதில்லை. அவனது உயிராக இயங்கிவந்த இலட்சிய நெருப்பு என்றுமே அணைந்து விடுவதில்லை. இந்த இலட்சிய நெருப்பு ஒரு வரலாற்றுச் சக்தியாக மற்றவர்களைப் பற்றிக் கொள்கின்றது. ஒரு இனத்தின் தேசிய ஆன்மா வைத்தட்டி எழுப்பி விடுகின்றது."

தேசியத் தலைவர் குறிப்பிடும் வரலாற்றுச் சக்தி தமிழர் தாயகம் எங்கும் விசாலிப்புப் பெற்று போராட்டத்திற்குள் பலரை உள்வாங்கிக் கொண்டது. போராட்டத்தின் அசை வியக்கம் புதிய வீச்சுப்பெற்றது.

## எங்கள் இலட்சிய நெருப்பு

தேசியத்தலைவர் குறிப்பிடும் இலட்சிய நெருப்பு தேசிய விடுதலைப்போரின் விசைப் பொறியாகியது. இயக்க வேலை களுக்காகத் துவிச்சக்கர வண்டியில் வவுனியா நகர்ப்புறத்தில் பயணம் செய்து கொண்டிருந்தபோது எதிரிகளால் எதிர்பாராத விதமாகச் சுற்றி வளைக்கப்பட்ட நிலையில் உயிரோடு எதிரி யிடம் பிடிபடக்கூடாது என்ற இயக்க மரபுகளுக்கமைவாக 28.05.1984 அன்று வீரவேங்கை ரகுமான் (அருணாசலம் இரகு பதி இரணை (இலுப்பைக்குளம்) என்ற போராளி சைனைட் உட்கொண்டு வீரச்சாவடைந்தான். இச்சம்பவம் வவுனியா வைரவப் புளியங்குளத்தில் இடம்பெற்றது. இந்த மாவீரனின் மரணம் வவுனியா மாவட்டம் எங்கும் எதிரொலித் தது. ஏனெ னில் இவனே வவுனியா மாவட்டத்தில் வீரகாவியம் படைத்த முதல் மாவீரனாவான். இந்த நிலையில் முல்லைத்தீவு மாவட் டத்தில் எதிரியின் அடாவடித்தனங்களை அவனுக்குப் புரிந்த இராணுவ மொழியில் பதிலடி கொடுக்க முடிவு எடுக்கப்பட் டது. இதன் எதிரொலியாக இலங்கை இராணுவத் தொடர் வண்டிகள் மீது 10.09.1984 அன்று ஒரு தாக்குதல் மேற்கொள் ளப்பட்டது.

முல்லைத்தீவு மாவட்டம் அளம்பில்-செம்மலை வீதியில் நாயாறு முதலாம் கட்டை வீதியில் இடம் பெற்ற இந்தத் தாக்குதலில் எதிரிகளின் ஆளணியும் ஆயுத தளவாடங்களும் சேத முற்றன. இந்தத் தாக்குதலின் போது லெப்.எட்வின் (இரத்தின சபாபதி திலீபன் 7ஆம் வட்டாரம் புதுக்குடியிருப்பு, முல்லைத்தீவு)

என்ற போராளி வீரச்சாவடைந்தான். இவனே முல்லை. மாவட்டத்தில் வீரச்சவடைந்த முதல் மாவீரன் ஆவான். முல்லையிலும் வவுனியாவிலும் இலங்கை இராணுவத்தின் மீதான தாக்குதல் விசாலிப்புப் பெற்ற போது மன்னார் மாவட்டத்திலும் லெப்.கேணல் விக்டர், லெப்.கேணல் ராதா போன்ற தலைமைத்துவப் போராளிகளால் பல இடங்களிலும் தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டன. மன்னார் பரப்புக் கடந் தானில் இடம்பெற்ற ஒரு முற்றுகையின் போது விழுப்புண் அடைந்த லெப்.நிதி (கிறிஸ்துநாதன் சுதாகர்-பனங்கட்டி கொட்டு, மன்னார்) என்ற போராளி எதிரியிடம் பிடிபடக்கூடாது என்ற இயக்க மரபைக்காக்க தன்னைத் தானே சுட்டு வீரச்சாவடைந்தார். இந்தச் சம்பவம் 18.12.1984 அன்று இடம் பெற்றது. மன்னார் மாவட்டத்தில் விடுதலைப் போரின் தியாக வேள்வியில் மரணித்த முதல் மாவீரன் இவனேயாவான்.

தென் தமிழீழத்தில் போராட்டம் பரவலாக்கப்பட்டபோது அம்பாறையில் தமிழ் பேசும் இளைஞர்கள் அணிஅணியாகப் போராட்டத்தின் பால் ஈர்க்கப்பட்டார்கள். அம்பாறை மாவட் டத்தில் கல்முனையில் விடுதலைப் போராட்ட வரலாற்றுச் சுவரொட்டிகளை ஒட்டிக்கொண்டிருந்தபோது இலங்கை இராணுவத்தின் சிங்கரெஜிமண்ட் சிப்பாய்களால் சுற்றி வளைக்கப்பட்டபோது ஏற்பட்ட மோதலில் வீரவேங்கை மாறன் (நாகராசா திருமாறன் வவுனியா வீதி கல்முனை-02) என்ற போராளி 30.12.1984 அன்று வீரச்சாவடைந்தான். அம்பாறை மாவட்டத்தில் வீரமரணமடைந்த முதல் மாவீரன் இவனேயாவான்.

1984 ஆம் ஆண்டு மட்டக்களப்பு, மன்னார், வவுனியா, முல்லைத்தீவு, அம்பாறை ஆகிய தமிழ் மாவட்டங்கள் தோறும் முதல் மாவீரர்கள் தியாக மரணமடைந்தார்கள். இது எங்கள் தாயக விடுதலைப்போர் எங்கள் தாயக மண் எங்கும் உறுதியான ஒரு தலைமையின் கீழ் ஆரோக்கியமான வெகு சனத்தளத்தில் பரந்துபட்ட வெகுசன எழுச்சிப் போராட்டமாக வடிவம்பெற முன்னோடி நிகழ்வுக்கு இது கால்கோள் இட்டது.



## சைனைட்டும் கைக்குண்டும் தற்காப்புக் கவசமாதல்

1970 களில் இளைஞர்கள் எழுச்சிப் போராட்டங்கள் வீச்சுப்பெற்றபோது பேரினவாதிகளுக்கு சிம்மசொப்பனமாக விளங்கிய தியாகி பொன்.சிவகுமாரன் எதிரியுடன் உயிருடன் பிடிபடக் கூடாது என்ற உயரிய நோக்குடன் கோப்பாய்ப் பொலிசாரால் 05.06.1974 அன்று சுற்றி வளைக்கப்பட்ட நிலையில் சைனைட் உட்கொண்டு தியாகமரணமடைந்தான். தனியொரு மனிதனாக ஒரு இயக்கமாகவே செயற்பட்ட அவனது மரணம் இளைஞர் சமுதாயத்தின் இதயங்களில் இனமான உணர்வை வேகப்படுத்தியது. பல இளைஞர்களைப் பேரினவாத ஒடுக்குமுறைக்கு எதிராகப் போராடத் தூண்டியது. அவனது தியாகமரணமேயாகும்.

இவ்வாறு திரள் நிலையில் ஒன்று கூடிய இளைய சமுதாயத்தின் இலட்சிய உணர்வுகளுக்கு செயல்வடிவம் கொடுக்க 1976 ஆம் ஆண்டு விடுதலைப்புலிகள் அமைப்பு உருவாக்கப்பட்டது. நன்கு ஸ்தாபனமயப் படுத்தப்பட்ட நிலையில் விடுதலைப்புலிகள் தமிழர் தேச விடுதலைப் போர் முன்னெடுக்கப் பட்டபோது அவர்கள் சைனைட்டை ஒரு தற்காப்புக் கவசமாகப் பயன்படுத்தினார்கள். இதனால் சைனைட் என்ற இரசாயனக் கல வைக்கு ஒரு அரசியல் அந்தஸ்து ஏற்பட்டது. ஆய்வு கூடங்களில் தேங்கிக்கிடந்த சைனைட் விடுதலைப் புலிகளின் கழுத்தில் ஒரு இலட்சிய உறுதியின் அடையாளச் சின்னமாக்கப்பட்டது.

தேசியத்தலைவரிடம் சைனைட் பற்றிய ஒரு கேள்வியை பிரபல சர்வதேச ஊடகவியலாளரான அனிதா பிரதாப் தொடுத்தபோது அதற்குப்பதில் கொடுத்த தேசியத்தலைவர் "நானே முதலில் சைனைட் கட்டினேன். இதன் பின்னர் தான் மற்றவர்களைக் கட்டச் சொன்னேன்" என்றார். இதேபோல மறைந்த யாழ். மாவட்டத்தளபதி கேணல்.கிட்டு அவர்களும் இன்னுமொரு சர்வதேசப் பத்திரிகையாளரான பாபரா குரொசொட் அவர்களுக்கு (Babara Crossatte) வழங்கிய செவ்வியில் மறைந்த மாவீரர்களது ஞாபகச் சின்னமாகவும் எங்கள் கழுத்தில் சைனைட் இருக்கிறது என்றார்.

## சைனைட் உட்கொண்ட முதல் போராளி

விடுதலைப்புலிகள் கழுத்தில் தொங்கும் சைனைட் களத்தில் இலட்சியம் காக்க உதவியுள்ளது. இலங்கை இராணுவத்தால் யாழ்ப்பாணம் வல்வெட்டித்துறையில் 18.05.1984 அன்று சுற்றிவளைக்கப்பட்ட போது வீரவேங்கை. செல்வம் பசீன் (வேலுப்பிள்ளை அன்னலிங்கம் பசீரதன்- 05ஆம் வட்டாரம் மண்டைதீவு) என்ற போராளி இயக்கமரபு காப்பதற்காக சைனைட்டை உட்கொண்டு இயக்க இரகசியங்களைக் காப்பாற்றினான். இவனே விடுதலைப்புலிகள் அமைப்பில் சைனைட் உட்கொண்ட முதல் மாவீரன் ஆவான். இவனை உயிரோடு கைது செய்யமுயன்ற இலங்கை இராணுவம் அந்த முயற்சியில் தோற்றுப் போனது. காப்புக் கவசமான சைனைட் அவனையும் இயக்கத்தையும் காக்கும் அற்புதசக்தியானது.

## ஒரு சைனைட் - இருபோராளிகள்

இலங்கை இராணுவத்துடனான சமரிலும் சரி இந்திய இராணுவத்துடனான போராட்டக் களங்களிலும் சரி சைனைட் உட்கொண்டு பல போராளிகள் மாவீரர்களாகியுள்ளனர்.

வாழ்வில் ஒன்றாக அமர்ந்து ஒரே தட்டில் பகிர்ந்து உணவு உட்கொண்ட போராளிகள் மரணத்தின் போது ஒரே சைனைட்டை இருவர் பகிர்ந்து உட்கொண்டு மரணமடைந்துள்ளனர். இலங்கை இராணுவத்தால் 12.03.1986 அன்று அம்பாறை கல்முறைப் பகுதியில் சுற்றிவளைக்கப்பட்டபோது இரு போராளிகளை உயிருடன் கைது செய்ய இராணுவம் முயன்றபோது அந்தப் போராளிகள் இருவரும் எதிரியுடன் போராடி இறுதியில் தம்மிடம் இருந்த ஒரேயொரு சைனைட்டைப் பகிர்ந்து உட்கொண்டு இருவரும் வீரமரணமடைந்தனர். அவர்கள் பெயர்கள் பின்வருமாறு லெப்.உமாராம் (முத்துக்குமாரு சந்திரகுமார் கல்லடி), வீரவேங்கை. சுந்தர்( நல்லதம்பி சுந்தரலிங்கம் காரைதீவு) ஆகியோராகும். இதேபோல் இந்திய இராணுவம் தமிழர் தாயகத்தை ஆக்கிரமித்திருந்த போது தண்ணீர் எடுக்க காரைநகரில் ஒரு கிணற்றடிக்குச் சென்ற இரண்டு விடுதலைப் புலிகளை இந்திய இராணுவம் சுற்றிவளைத்தபோது இரண்டு போராளிகளான வீரவேங்கை. சங்கரை (தம்பு-துரைராசா காரைநகர் யாழ்ப்பாணம்) வீரவேங்கை. கோபி ஆறுமுகம் தவபாலன் களபூமி காரைநகர்) இருவரும் தம்மிடம் இருந்த ஒரேயொரு சைனைட்டை பகிர்ந்து உண்டு வீரச்சாவடைந்தனர். இந்த மாவீரர்களது உயிர்த்தியாகம் நெஞ்சில் கனலைமூட்டியது. கண்களில் கண்ணீரையும் வரவழைத்தது.

## ஒரு கைக்குண்டு - இருபோராளிகள்

எங்கள் மண்மீட்புப்போரின் ஆரம்பகாலம் முதல் இற்றை வரை விடுதலைப் புலிகளால் கைக்குண்டுகள் ஒரு போராயுதமாகவே பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆரம்பகாலத்தில் கைக்குண்டுகள் சுயஉற்பத்தி ஆயுதங்களாகவே (Home Made Granade) இருந்தன. உள்ளீடுகளைப் பொறுத்தவரை அன்று வேறுபட்டவையாக இருந்தன. ஆனால் வடிவம் ஒன்றுபட்டதாகவே இன்றும் உள்ளது. சர்வதேச விடுதலைப் போராட்ட அமைப்புகளும் சர்வதேச இராணுவ தேவைகளுக்கும் எல்லாநாடுகளிலும் ஒரே வடிவம் கொண்டனவாகவே உள்ளன. முன்னாள் சிறிலங்கா சனாதிபதி ஜே.ஆர்.காலத்தில் இஸ்ரேலில் தயாரிக்கப்பட்ட கைக்குண்டுகளுக்கு 'J.R' எனப் பெயரிடப்பட்டு இலங்கைக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இலங்கை அரசாங்கம் கைக்குண்டுகளை இறக்குமதி செய்த காலத்தில் விடுதலைப் புலிகள் தமது தொழில்நுட்ப அறிவைப் பயன்படுத்தி கைக்குண்டுகளை உற்பதி செய்தனர். விடுதலைப் புலிகள் கைக்குண்டுகளை ஒரு போராயுதமாக மட்டுமன்றி எதிரியிடமிருந்து தம்மைக் காக்கும் ஒரு கேடயமாகத் தற்பாதுகாப்புக் கவசமாகவும் பயன்படுத்தி வருகின்றார்கள். எதிரிகள் போராளிகளைக் கைதுசெய்ய முயன்றால் தம்மிடம் இருக்கும் கைக்குண்டுகளை வெடிக்கவைத்து வீரச்சாவடைவதோடு எதிரியின் எண்ணத்திலும் மண்ணள்ளிப் போட்டுவிடுகிறார்கள். சில போர்க்களங்களில் ஒரேயொரு கைக்குண்டு மட்டும் எஞ்சிய நிலையில் இரண்டு போராளிகள் தமக்கிடையே அவற்றை வெடிக்க வைத்து வீரச்சாவைத் தழுவிக்கொண்டனர். அந்தச் சம்பவம் பின்வருமாறு:

சிங்கள இராணுவப்படைகள் முல்லைத்தீவு மாவட்டத்தில் மாங்குளம், துணுக்காய், வவுனிக்குளம், பாண்டியன் குளம், மல்லாவி போன்ற பரந்த பூமியில் படைகளை இறக்கி சுற்றிவளைப்புக்களை 11.03.1986 அன்று மேற்கொண்டார்கள். இந்தச் சுற்றிவளைப்புகள் மூன்று தினங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆயுதவளமும் ஆளணி வளமும் குறைந்த நிலையிலும் விடுதலைப் புலிகள் ஆங்காங்கே கடும் சமரில் ஈடுபட்டார்கள். பலத்த மோதல்களும் இடம்பெற்றன. துணுக்காய்ப் பகுதியில் ஓரளவு காடு சார்ந்த பிரதேசத்திற்குள் நுழைந்த எதிரிப்படைகள் மீது உக்கிரமான தாக்குதலை இறுதிவரை மேற்கொண்ட விடுதலைப் புலிகள் இருவர் தம்மிடம் இருந்த எல்லா ஆயுதவளமும் தீர்ந்த நிலையில் தம்மிடம் எஞ்சியிருந்த ஒரேயொரு கைக்குண்டை மட்டும் தமக்கிடையே வெடிக்கவைத்து வீரமரணத்தைத் தழுவிக் கொண்டனர். அவர்களது பெயர்கள் பின்வருமாறு: வீரவேங்கை. ஜீவா (கந்தையா கெங்காதரன் செட்டிகுளம் வவுனியா), வீரவேங்கை. ரஞ்சன் (சரவணமுத்து சத்தியசீலன் வவுனிக்குளம்).

இதேபோல வேறுபல சமர்களிலும் போராளிகள் கைக்குண்டைக் கேடயமாகப் பயன்படுத்தியுள்ளார்கள். தமது உயிரைத் தியாகம் செய்து இயக்க இரகசியங்களைக் காப்பாற்றியுள்ளார்கள். சிலவேளைகளில் சைனைட்டும் கைக்குண்டும் கைவசம் இருக்கும் போது சைனைட்டை உட்கொண்டு வீரச்சாவைத் தழுவும் போராளிகள் தம்மிடம் இருக்கும் கைக்குண்டின் 'கிளிப்பை' (Clip) கழற்றி தமக்கிடையே வைத்து இறந்த தமது உடலைக் கைப்பற்ற முனையும் எதிரிப்படைகளுக்கு சேதத்தையும் ஏற்படுத்தியுள்ளார்கள். மட்டக்களப்பு கள்ளியந்தீவில் சிறிலங்கா அதிரடிப்படையுடனான சமரின் போது சைனைட் உட்கொண்டபின்தனது கையில் இருந்த கைக்குண்டு எதிரியின் கையில் போய்ச் சேரக்கூடாது என்ற உறுதியுடன் அந்தக் கைக்குண்டை வெடிக்க வைத்து 14.11. 1986 அன்று வீரவேங்கை புண்ணியன் என்ற போராளி (இருதயம் மைக்கல் கொலின்-மத்தியவிதி மட்டக்களப்பு) வீரச்சாவைத் தழுவிக்கொண்டான்.

இவ்வாறாகப் பல அற்புதமான தியாக வரலாற்றைக் கொண்டது எங்கள் தாயக விடுதலைப் போராட்டமாகும். இந்த மண்மீட்புப் போரில் மாவீரர்களது பங்களிப்பும் அர்ப்பணிப்பும் பற்றி தேசியத்தலைவர் அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்.

"மாவீரர்கள் காலத்தால் சாகாத சிரஞ்சீவிகள். சுதந்திரச் சிற்பிகள். எமது மண்ணில் ஒரு மாபெரும் விடுதலை எழுச்சிக்கு வித்திட்டுச் சென்ற வீரமறவர்கள்"

அவரின் இக்கூற்று எமது நெஞ்சின் வைரவரிகளாக வேண்டும்.

# மாவீரர்நாளாக அனுஷ்டிக்கப்படும் நாட்கள்

**16.01.1993**
கடலில் காவியமான கிட்டு
உட்பட பத்து வேங்கைகள்
நினைவாக

**19.03.1988 - 19.04.1988**
அன்னை பூபதி அம்மா நினைவுநாள்.
மார்ச் மாதம 19 ஆம் திகதி
தொடக்கம் ஏப்ரல் மாதம்
19 ஆம் திகதி வரை

**05.07.1987**
கரும்புலி நாள்

**15.09.1987 - 26.09.1987**
தியாகதீபம் திலீபன் நினைவு நாள்
செப்ரெம்பர் 15ஆம் திகதி தொடக்கம்
செப்ரெம்பர் 26ஆம் திகதிவரை.

**05.10.1987**
குமரப்பா, புலேந்திரன் உட்பட
12 வேங்கைகள் சயனைட் அருந்தி
வீரச்சாவடைந்த நாள் ஒக்ரோபர்
மாதம் 5ஆம் திகதி.

**10.10.1987**
தமிழீழ விடுதலைப் போரில் இன்னுயிர்
ஈய்ந்த முதற் பெண்புலி
மாலதி (தமிழீழ பெண்கள் எழுச்சி நாள்)

**27.11.1992**
மாவீரர் நாள், நவம்பர் மாதம்
25ஆம் திகதி தொடக்கம், நவம்பர்
மாதம் 27ஆம் திகதி வரை.

# மாவீரர்கள் உடல்கள் ஏன் புதைக்கப்பட வேண்டும்?




வீர மரணமடையும் புலி வீரர்களது உடல்கள் இனித் தகனம் செய்யப்படமாட்டாது. அவைகள் புதைக்கப்பட வேண்டும் என நாம் முடிவெடுத்துள்ளோம். இம்முடிவானது போராளி களுள் மிகப் பெரும்பாலானோரின் விருப்பத்துக்கிணங்கவே எடுக்கப்பட்டடுள்ளது.

மாவீரர்களை தகம் செய்வதற்கென்று அமைக்கப்பட்ட "மாவீரா துயிலும் இல்லங்களில்" இப்பொழுது மாவீரர்கள் புதைக்கப்பட்டு அங்கே நினைவுக் கற்கள் வைக்கப்பட்டுள் கொண்டிருக்கின்றன.

இது என்றென்றும் தியாகத்தின் சின்னமாக எமது மண் ணில் நிலைபெறும்.

மாவீரர்களின் உடல்கள் புதைக்கப்பட வேண்டும் என நாம் ஏன் முடிவெடுத்தோம் என்பதையும் அதற்குரிய காரணி களையும் இங்கேபார்ப்போம்.

## போராளிகளின் புகழுடல்கள் ஏன் புதைக்கப்பட வேண்டும்?

போராளிகள் தனிமனிதர்கள் அல்லர். அவர்கள் ஒரு இனத்தின் காவலர்கள். அந்த இனத்தின் வழிகாட்டிகள். ஒரு புதிய வரலாற்றைப் படைக்கும் சிருஸ்டிகர்த்தாக்கள். இவர் களது வீரச்சாவுகள் வெறும் மரண நிகழ்வுகள் அல்ல. இவர் களது நினைவுகள் வரலாற்றுச் சின்னமாக என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டும். இந்தத் தியாகச் சின்னங்கள் எமது மக்களின் மனதில் காலங்காலமாக விடுதலை உணர்வை ஊட்டிக் கொண்டே இருக்கும். அதாவது, பேராளி களின் கல்லறைகள் மக்களின் உள்ளத்தில் சுதந்திரச் சுடரை ஏற்ற உதவும் நெருப்புக் கிடங்குகளாகவே பயன்படும்.

எனவேதான போரரிளகளது உடல்களைப் புதைத்து, கல்றைகளை எழுப்பி, அதை என்றென்றும் உயிர்த்துடிப் புள்ள ஒரு நினைவுச் சின்னமாக நிலைநிறுத்த நாங்கள் விரும்புகின்றோம்.

அன்புக்குரிய எமது பெற்றோர்களே, மக்களே!

எமது இயக்கத்தின் இந்த முடிவை நீங்களும் ஏற்றுக் கொள்வீர்கள் என நம்புகின்றோம். இந்த முடிவு, காலங் காலமாக இருந்து வந்த சம்பிரதாயம், சாஸ்திரங்களுக்கு முரணாக இருக்கின்றது என நீங்கள் கருதலாம். ஆனால் உங்களது பிள்ளைகளான புலிவீரர்கள் இந்த நாட்டின் பொதுச்சொத்தாக, பொக்கிசமாக இருக்கின்றார்கள். பல்லாயி ரக்கணக்கான இப்பொக்கிசங்கள் வெறும் நினைவுகளாகவும், எண்ணிக்கைகளாகவும் மட்டும் இருக்கக்கூடாது.

அவை பொருள் வடிவில் என்றென்று எம் மண்ணில் இருந்து கொண்டேயிருக்க வேண்டும்.

இது ஒரு புறமிருக்க, எமது சகதோழர்கள் சிலரது வீர மரணத்தின் பின் நடைபெறும் சில சம்பவங்கள் எமது மனதைப் பாதித்திருக்கின்றன. அதாவது, பெற்றோரரோ, உடன் பிறந்தவர்களோ உறவினர்களோ இல்லாது நடை பெறும் எமது போரரிளகளின் இறுதிச் சடங்குகளை நாம் கண்டிருக்கிறோம்.

என்னதான் எமது தோழர்கள் சூழ நின்று தகன நிகழ்ச்சி களை நடாத்தினாலும் கூட, அப்போராளியைப் பெற்றெடுத்த - சீராட்டி வளர்த்த தாய் தந்தையரோ, அல்லது உடன் பிறந்தவர்களோ அங்கே இல்லாதது எமது மனதை நெருடு கின்றது.

பேராட்ட சூழல் காரணமாக அவர்கள் வரமுடியாது விட்டாலும் நாளை இப்பெற்றோர்களுக்கு அவர்களது பிள்ளையின் நினைவாக நாங்கள் எதைக்காட்டப் போகின் றோம்?

அப்படியான சூழலில் அவர்கள் படும் துயரையும், அங்க லாய்ப்பையும் அனுபவவாயிலாக நாம் அறிந்தே இருக்கின் றோம்.

எனவேதான் தனது பிள்ளையின் உடலைப் பார்க்காது விட்டாலும் கூட அவனது உடல் புதைக்கப்பட்ட கல்லறை யைப் பார்த்து ஓரளவு ஆறுதல் அடையவாவது நாங்கள் உதவிசெய்வோம். அத்துடன் அடிக்கடி அக்கல்லறைக்குச் சென்று அவனது நினைவுகளை மீட்டுப்பார்ப்பதுடன் ஓர் ஆத்ம திருப்தியையும் அவர்கள் அடைந்து கொள்வார்கள்.

அன்புக்குரியவர் ஒருவரின் சாவு சோகமானதுதான். ஆனால் அந்தச் சோகத்தை மறக்க வேண்டும் என்பதன் அர்த்தம் அவரை மறக்க முயற்சிப்பதாக இருக்க முடியாது தானே!

கல்லறைக்கு மீண்டும் மீண்டும் செல்வதால் சோகம் அதிகரிக்கும் என்றில்லை. உண்மையில் அப்படிச் செய்வ தால் மன நிம்மதி அடையும்.

எல்லாம் சரியாகத்தான் இருக்கின்றது. தகனம் செய்வதற் குப் பதிலாக புதைப்பது என்பது தமிழர் பண்பாட்டுக்கு முரணான செயலல்லவா? என யாராவது வினா எழுப்பலாம்.

நீண்டகாலம் தொட்டு இருந்து வரும் 'தகனம் செய்வது' தமிழரின் பண்பாடு என எண்ணுவது தவறானது. உண்மை யில் பண்டைய தமிழர் பண்பாட்டில் இறந்தவர்களது உடல் புதைக்கப்பட்டு நடுகல் வைக்கப்பட்டதாக போதுமான வரலாறுகள் உண்டு. புறநானூற்று இலக்கியமும் ஈமத்தாளி வடிவிலான தொல்லியல் சான்றுகளும் நடுகற்களும் இதை நிரூபிக்கப் போதுமானது.

ஆனாலும் இந்த ஆராய்ச்சிகள் ஒரு புறமிருக்கட்டும். உண்மையில் இந்த முறையை ஒரு சமூக சீர்திருத்தமாக நாங்கள் செய்யவில்லை. இது போராளிகளுக்கு மட்டுமே பொருந்தும். பொதுமக்களுக்கல்ல. எனவே இங்கே பண்பாட் டுப் பிரச்சினை எழ நியாயமில்லை. அத்துடன் புதைப்பது என்ற முடிவானது வெறும் இறுதிக்கிரியை நிகழ்ச்சி அல்ல. அது போராட்டத்தை உயிர்ப்புடன் என்றென்றும் வைத்திருக் கும் ஒரு சரித்தரத் தியாகத்தின சின்னம்.



சாவு வாழ்வின் முடிவல்ல
தொடக்கமுமாகலாம் எனச்சொல்லி
வாழ்வுக்குப் புதிதான வழிகாட்டிகள்.
வருடமொரு கவிதையால்
இவர்களை வரைய முடியாது.
கார்த்திகை மாதத்தில் பூப்பதால்
மற்றவைகளிருந்து மாறுபட்டு
அதிசயமாய் விளைவதால்
கானகத்தில் கரைந்துறைவதால்
கழுத்தில் நஞ்சணிவதால்
மஞ்சளும் சிவப்புமாய் மலர்வதால்
கார்த்திகைப் பூவே
மாவீரருக்குக் கனகச்சிதமானது.
கார்த்திகைப் பூவே இவர்
இவரே கார்த்திகைப் பூ
மாவீரர் நாள்
கார்த்திகைப்பூ பூத்திடும்நாள்.

-புதுவை இரத்தினதுரை -

கார்த்திகைப் பூ
பூத்திடும் நாள்



# தலைவரிடமிருந்து கற்போம்...

**- திறலோன் -**

## வேலுப்பிள்ளை பிரபாகரன்!

உலகின் தென்கோடி மூலையில் ஒரு சின்னஞ்சிறு நகரத்தில் பிறந்த இந்த மனிதர். இன்று உலகப் பெருநகரங்களிலும்கூட அறியப் பட்ட ஒரு மனிதராக, உலகப் பேரரசுகளாலும், உலகப் போரியல் வல்லுனர்களாலும், வியப்பு டன் நோக்கப்படுகின்றன ஒருவராக, உலக விடுதலை இயக்கங்களுக்கும், விடுதலைக்காக போராடுகின்ற இனங்களுக்கும் வழிகாட்டியா கவும் முன்மாதிரியானவராகவும் கொள்ளப்படுப வராக, எதிரிகளால் புரிந்துகொள்ளப்பட முடியா தவராக, வெல்லப்பட முடியாதவராக இருக்கிறார் என்றால்...

அவர் யார்? அவருடைய தனித்துவம்தான் என்ன?

அவர் மனிதர்...

நாட்டையும் மக்களையும் நேசிக்கின்ற...

நாட்டியனதும் மக்களினதும் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கின்ற சலுகைகளுக்கு மண்டியி டாத, போலிச் சமரசத்துக்கு இடங்கொடுக்காத உண்மை மனிதர்.

"இந்த உண்மை மனிதர்" என்ற அடையா ளம்தான் உலகிலுள்ள மற்றத் தலைவர்களை விட அவரை வேறுபடுத்தி உயர்ந்த நிலையில் வைத்துப் பார்க்க வைக்கிறது.

## தமிழினத்தின் கடந்த காலத்தலைவர்கள்

ஈழத்தமிழினதின் நவீனகால அரசியல் வரலாறு 1850 களிலிருந்து ஆரம்பித்தது என்று சொல்லலாம். ஆறுமுக நாவலர், பொன்னம்பலம் இராமநாதன் பொன்னம்பலாம் அருணாசலம், ஹென்றி பேரின்பநாயகம், ஜி.சுந்தரலிங்கம். ஜீ.ஜீ.பொன்னம்பலம், எஸ்.ஜே.வி. செல்வநாயகம் என்று பெரிய தலைவர்கள் பரம்பரையே தமிழினத்துக்கு இருந்தி ருக்கிறது. இந்தத் தலைவர் பரம்பரையிடம் இல்லாத சிறப்பு, தனித்துவம் நமது தலைவரிடம் இருப்பதால்தான் அவர் தேசியத்தலைவர் என்று உயரிய இடத்தில் வைத்துப் போற் றப்படுகிறார்.

கடந்த கால தலைவர் பரம்பரையை நாங்கள் அடிப்படை வாதத் தலைவர்கள் மிதவாதத் தலைவர்கள் என்று இரண் டாக வகுக்கலாம். ஆறுமுகநாவலர், சேர். பொன்னம்பலம் இராமநாதன், சேர். பொன்னம்பலம் அருணாசலம், ஜீ. சுந்தர லிங்கம் ஆகியோரை அடிப்படைவாதத் தலைவர்கள் வரி சைக்குள்ளும், ஹென்றி பேரின்பநாயகம், ஜீ.ஜீ.பொன்னம் பலம், எஸ்.ஜே.வி. செல்வநாயகம் போன்றோரை மிதவாதத் தலைமைக்குள்ளும் அடக்கலாம்.

அடிப்படைவாத தலைவர்கள் குறுகிய சமய சாதிய வட்டத்துக்குள் நின்று கொண்டு, தமிழ்மக்களது உரிமைப் போரையும் அந்த வட்டத்துக்குள் குறுக்க நினைத்வர்கள், மிதவாதத் தலைவர்கள் இந்த வட்டத்துக்கு அப்பால் செல்ல முயன்ற போதிலும், மக்களின் உரிமைப் போராட்டத்தை வாக்குச் சீட்டு அரசியலைத்தாண்டி இறுதி இலக்கை நோக்கி வழி நடத்திச் செல்ல முடியாமலோ அல்லது விரும் பாமலோ இருந்தவர்கள்.

அடிப்படையில் இந்த இரண்டு பகுதியினருக்கும் இடை யில் ஒரு ஒற்றுமையிருந்தது. இந்த இரண்டு பகுதியினருமே ஆங்கில மொழியில் கல்விகற்று, ஆங்கிலேயர்களுடைய அரசியல் கோட்பாடுகளுக்குள் நின்று கொண்டு அவர்கள் காட்டிய வழியில் சென்று உரிமைகளை வென்றெடுக்கலாம் என்று நம்பியதுதான் அந்த ஒற்றுமையாகும்.

ஆறுமுக நாவலர் கிறிஸ்தவ மதமாற்றத்துக்கு எதிராக வும், தமிழ் மொழி வளர்ச்சிக்காகவும் பாடுபட்டதாக சொல் லிக்கொண்டாலும், "அந்தக் காலத்தில் அவர் செய்ததைப் போல வேறு எவரும் சிறப்பாகச செய்திருக்க முடியாது" என்று பாராட்டப்படும் அளவுக்கு கிறிஸ்தவ மறை நூலான பைபிளை தமிழில் மொழி பெயர்த்துக் கொடுத்து, மதமாற்றம் செய்த மதகுருமாரின் பணியை இலகுவாக்கியதும், சைவத் தையும் தமிழையும் பாதுகாக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு, சற்சூத்திரக் கோட்பாட்டை உருவாக்கி குடாநாட் டில் இருந்த சாதிய முரண்பாட்டை இன்னும் இறுக்கமாக்கிய தும், தான் உருவாக்கிய கல்விக் கூடங்களில் தமிழ் பிள்ளை களில் ஒரு பகுதியினருக்கு சாதி அடிப்படையில் கல்வி கற்க அனுமதி மறுத்ததும் அவர் தமிழினத் தவைவர் என்ற அடையளத்தை இழக்க வைத்து மதப் பெரியார் என்ற வட்டத்துக்குள் அவரைக் குறுக்கிவிட்டது.

அதுபோலவே இலங்கைத் தேசியம் என்ற கற்பனை தேசியத்தை நம்பிய சேர்.பொன் இராமநாதன், சேர்.பொன் அருணாசலம் போன்றவர்கள் அது தமிழ்த் தேசியத்தை சிங்கள தேசியத்திடம் அடிமைப்படுத்துவதற்கு, பிரித்தானியர் கள் விரித்த சதிவலை என்பதை உணரவில்லை. முதலாம் உலக யுத்தகால நெருக்கடிகளுக்கு மத்தியில் சிங்கள மக்களின் உரிமைகளுக்காக பிரித்தானிய அரசிடம் வாதாடு வதற்கு இலண்டன் சென்ற சேர்.பொன் இராமநாதனுக்கு தமிழ்மக்கள் இழந்துவிட்ட இறைமைக்காவும உரிமைக்காக வும் வாதாடத் தோன்றவில்லை. இலங்கை தேசியத்துக்காக, அதன் ஆட்சி உரிமைக்காக அதிகளவுக்கு குரல் கொடுத்த சேர்.பொன் அருணாசலம் சிங்கள தேசியத்தில் கபடத் தனத்தை பௌத்த சிங்களப் பேரினவாத அச்சுறுத்தலை கவ னிக்கத் தவறிவிட்டார். பின்னால் வந்த மிதவாதத் தலைவர் கள் தமிழ் தேசியம், தமிழர் தாயகம் பற்றியெல்லாம் முன் னையவர்களைவிட வித்தியாசமாகச் சிந்தித்தாலும், இதற் காக அவர்கள் பரந்துபட்ட மக்கள் மத்தியில் வேலை செய்தா லும், பிரித்தானிய பாணி வெஸ்ட்மினிஸ்டர் ஆட்சிமுறையின் கீழ் வாக்குச் சீட்டு அரசியலின் மூலம் இவற்றை பாது காக்கலாம். இழந்த உரிமைகளை வென்றெடுக்கலாம் என்று

நம்பியதும், மக்களை நம்ப வைத்ததும், இவர்கள் செய்த பெரிய முட்டாள் தனமாகும். இந்த வெஸ்ட்மினிஸ்டர் ஆட்சி முறையை வைத்துக் கொண்டே, “இந்த மக்களுக்காக மக்களுடைய பிரதிநிதிகளைக் கொண்டு நடத்தப்படுகின்ற மக்களுடைய ஆட்சி” என்ற கவசத்தை வைத்துக்கொண்டே சிறிலங்காவில் மாறி மாறி ஆட்சிக்கு வந்த சிங்களப் பேரினவாத அரசுகள் தமிழர்களின் பாரம்பரிய நிலங்களை பறித்த போதும், அரசியல் உரிமைகளைப் பறித்து இரண்டாந்தரக் குடிமக்கள் ஆக்கியபோதும், தமிழ் மக்கள் மீது அரசபயங்கரவாதத்தையும், ஒழுங்கமைக்கப்பட்ட வன்முறைகளையும் தொடர்ச்சியாகத் தூண்டிவிட்டபோதும் இவர்கள் மலைபோல் நம்பிய ஜனநாயகப் பாரம்பரியங்களும், வெஸ்ட்மினிஸ்டர்பாணி ஆட்சி முறையும் தமிழ் மக்களைக் காப்பாற்றாத நிலையில் “கடவுள் தான் இனி தமிழ்மக்களைக் காப்பாற்ற வேண்டும்” என்று வேதாந்தம் பேசத்தான் இவர்களால் முடிந்தது.



## பலம்தான் அதிகாரத்தின் அடிப்படை

இன்றைய நவீன உலகின் இருப்பு என்பது பலத்தின் அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படுகிறது. சனநாயம், சோசலிசம், கம்யூனிசம், முதலான அனைத்து அரசியல் சித்தாந்தங்களும் வழிமுறைகளும் பலத்தின் அடிப்படையில்தான் நிலைத்திருக்கிறது. தேசங்களினதும், தேசிய இனங்களினதும் விடுதலை என்பதும், எழுச்சி என்பதும் கூட பலம் சார்ந்த விடயமாகத்தான் இருக்கிறது.

“விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம்” என்கின்ற முழக்கங்களை முதன்முதலாக உலகுக்கு உரத்துச் சொன்ன, பிரெஞ்சுப் புரட்சி பஸ்தில் சிறையை உடைத்ததால் - அங்கிருந்த ஆயுதக்களஞ்சியம் புரட்சியாளரால் கைப்பற்றப்பட்டதால் வந்த பலத்தின் அடிப்படையில் தான் இறுதி இலக்கை எட்டியது.

சூரியனே அஸ்த்தமிக்காத பிரித்தானிய சாம்ராட்சியத்துக்கெதிராக அமெரிக்கர்கள் போர்க்கொடி தூக்கி ஐக்கிய அமெரிக்க குடியரசை நிறுவியதால்தான், காலனிய அடிமைச் சிறைக்குள் அடைபட்டுக் கிடந்த பல நாடுகளுக்கு சுதந்திரம் கிடைக்கும் என்ற நம்பிக்கை பிறந்தது.

கடந்த காலத்தில் தங்களுடைய பலத்தை இழந்ததால் தான் ஆர்மேனியர்களும் குர்தியர்களும், ஸ்லாவியர்களும் ஒரு தேசமாக உருப்பெறாமல் பல பெருந்தேசிய அரசுகளின் ஆக்கிரமிப்புக்குள் சிக்கிச் சிதறுண்டு போனார்கள்.

ஈழத்தமிழ் மக்களும் கடந்தகாலத்தில் பலமற்றவர்களாக நின்று உரிமைகளை யாசித்துக் கேட்டதால்தான் அகதிகளாக அடித்து விரட்டப்பட்டார்கள். இந்த அடிப்படை உண்மையை உணர்ந்து பலவீனமாயிருந்த தமிழர் தரப்பை பலமுள்ள சக்தியாக மாற்றியவர் நமது தேசியத் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்கள்.

18.08.1993ம் ஆண்டு தமிழீழ சட்டக்கல்லூரியிலே ஆற்றிய உரையிலே இதை அவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

“இன்றைய உலக ஒழுங்கை பலம்தான் நிர்ணயிக்கிறது. வலுமிக்க வல்லரசுகள் தாம் விரும்பியவாறு சர்வதேச உறவுகளையும், சர்வதேச சட்டத்தையும் ஒழுங்கையும் உலக நாடுகள் மீது திணித்து வருகின்றன. இந்த நாடுகள் தமது நலன்களை பேணும் வகையில் ஒரு புதிய உலக ஒழுங்கை உருவாக்க முயல்கின்றன. நாமும் நமக்கென்று ஒரு பலமான அரசைக் கட்டி எழுப்ப வேண்டும். நமது நாடு பலம் மிக்கதாக இருந்தால்தான் அந்நிய ஆதிக்கங்களின் ஊடுருவல்களையும், தலையீடுகளையும் எதிர்கொண்டு முறியடித்து எமது தனித்துவத்தைப் பேண முடியும்”

அதேபோல 27.11.1992 மாவீரர் தின உரையிலே, “இந்த உலகில் அநீதியும் அடிமைத்தனமும் இருக்கும் வரை சுதந்திரத்தை இழந்து வாழும் மக்கள் இருக்கும் வரை, விடுதலைப் போராட்டங்களும் இருந்துகோண்டுதான் இருக்கும். இது ஒரு வரலாற்று நியதி. ஒடுக்கப்படும் உலக மக்களில் ஒரு பகுதியனராகிய நாமும் சுதந்திரத்துக்காகப் போராடி வருகிறோம். எல்லா விடுதலைப் போராட்டங்களையும் விட எமது போர்க்குரல் இன்று உலக அரங்கில் பெரிதாக ஒலிக்கிறது. எமது சுதந்திரப் போர் ஏனைய விடுதலைப் போராட்டங்களைவிட சாராம்சத்தில் வித்தியாசமானது. தனக்கே உரித்தான தனித்துவத்தைக் கொண்டது” என்றும் நமது தேசியத் தலைவர் தெரிவிக்கின்றார்.

அதாவது “அடிவாங்குபவன் திருப்பி அடிக்க முற்பட்டால் தான் அடிப்பவன் நிறுத்துவான்” என்ற யதார்த்தமான உண்மையை “அடிவாங்குவது தமிழினத்தின் தலைவிதி” என்று சொல்லி அழுதுகொண்டும் தொழுதுகொண்டும் அடிமைகளாய் வாழ்ந்த தமிழினத்துக்கு உணர்த்தியவர் அவர். இதனாலே தான் அவர் ஏற்கனவே இருந்த தமிழ்த் தலைவர்கள் எல்லோரிலும் இருந்து வேறுபட்டு தனித்துவமான தலைவராக ஈழத்தமிழ் மக்களின் தேசியத்தலைவராக உயர்ந்து நிற்கிறார். உலகெங்கும் பேசப்படுகிறார்.

## புரட்சியை இறக்குமதி செய்யாத தலைவர்

கடந்த காலத்தில் தமிழ் மக்களின் உரிமைகளுக்காகக் குரல் கொடுக்கிறோம். போராடுகின்றோம். புரட்சி செய்கின்றோம் என்று புறப்பட்ட எல்லோருமே, ‘சுயம்’ என்ற ஒன்று இல்லாதவர்களாக, இரவல் அடையாளத்தில் வாழ்வதையிட்டு திருப்திப்படுபவர்களாக இருந்தார்கள். தத்துவம், சித்தாந்தம், சட்டம், அரசியல், நிர்வாகம், போராட்டம் எல்லாவற்றிலுமே மேற்குலகை அப்படியே பார்த்தொழுகும் (கொப்பியடிக்கும்) தன்மைதான் அவர்களிடம் மேலோங்கி இருந்தது. பிரித்தானிய வாக்குச் சீட்டு அரசியல் எப்படி இருக்கிறதோ அப்படித்தான் எங்களுடைய அரசியலும் இருக்க வேண்டும். பிரித்தானிய நீதி நிர்வாகம் எப்படி இருக்கிறதோ அப்படித்தான் எங்களுடைய நீதி நிர்வாகமும் இருக்கவேண்டும். பிரித்தானிய அதிகாரிகள் கழுத்தில் குளிர் பிடிக்காமல் ‘ரை’ கட்டினால் வெய்யில் கொழுத்தும் நாட்டில் வாழும் நாங்களும் ‘ரை’ கட்ட வேண்டும்.

புரட்சி என்றால் ரஷ்யாவில் லெனினும், சீனாவில் மாவோவும், கியூபாவில் சேகுவரா மற்றும் பிடல் காஸ்ரோவும் செய்ததைப் போலத்தான் புரட்சி செய்யவேண்டும். இப்படித்தான் இலண்டனிலும் மாஸ்கோவிலும் பீக்கிங்கிலும் மழைபெய்தால் நமது தாயகத்தில் குடை பிடிக்கின்ற போக்கு நிலவியது. ஆனால் இதையெல்லாம் தலைகீழாக மாற்றிவர் நமது தேசியத் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்கள்.

அவர் யாரையும் எந்த நாட்டு ‘மொடலை’யும் ‘கொப்பி’யடிக்கவில்லை. அவர் எங்களுடைய மக்களின் விடுதலைக்காக, எங்களுடைய வாழ்வியல் சூழலை வைத்து, உலக மக்களின் அனுபவங்களை எங்களது வாழ்வியல் சூழலோடு பொருத்தி, எங்களுக்கென்று தனித்துவமான அடையாளத்தை உருவாக்கினார்.

உதாரணமாக இன்று தமிழ் மக்களுக்கென்று தனித்துவமான காவல்துறை இருக்கிறது. அந்தத் தமிழீழக்காவல் துறையின் பொறுப்பாளர் நடேசன் அவர்கள் தலைவரைப் பற்றிச் சொல்லும்போது, “நாங்கள் இந்தத் தமிழீழக்காவல் துறையை உருவாக்கிய போது, அவர்களுக்கான சீருடைபற்றிச் சிந்தித்தோம்”. அப்போது தலைவர், சிறலங்காவிலும் இந்தியாவிலும் இருக்கிற காக்கி நிறச் சீருடை நமது காவல் துறைக்கு வேண்டாம். காக்கி என்பது அடக்குமுறைச் சின்னமாக மக்களின் மனதில் பதிந்துவிட்டது. தமிழீழக்காவல் துறை மக்களுக்கான காவல் துறையாக இருக்க வேண்டும். மக்களின் மனதில் இதுவும் அடக்குமுறையைச் செய்கின்ற காவல்துறை என்ற எண்ணமே வரக்கூடாது என்று கூறினார். அதன்படி இன்று கருநீல வெளிர் நீலச் சீருடையில் எமது காவல்துறை மக்களுக்கான காவல்துறையாக மக்களுக்கான காவல்துறை சிறப்பான பணியை ஆற்றிக் கொண்டிருக்கிறது” என்று குறிப்பிட்டார்.

இந்தக் காவற்துறையின் செயற்பாடுகள் பற்றி தமிழீழத் தேசியத் தலைவர் அவர்கள் கருத்துத் தெரிவிக்கும் போது “தமிழீழக் காவற்துறையினர் நல்லொழுக்கம், நேர்மை, கண்ணியம், கட்டுப்பாடு போன்ற சீரிய பண்புடையவர்களாக இருப்பார்கள். பொதுமக்களுக்குச் சேவை செய்யும் மனப்பாங்குடன் சமூக நீதிக்கும் சமூக மேம்பாட்டுக்கும் உழைக்கும் மக்கள் தொண்டர்களாகவும் கடமையாற்றுவார்கள். எமது பண்பாட்டிற்கு ஏற்ற வகையில் மக்களோடு அன்புடனும் பண்புடனும் பழகுவார்கள். சமூக விரோத குற்றச் செயல்கள் எவற்றுடனும் சம்பந்தப்படாதவர்களாகவும் தேசப்பற்று மிகுந்தவர்களாகவும் 24 மணி நேரமும் பணியாற்றுவார்கள். தமிழீழக் காவற்துறையைப் பொறுத்தவரை குற்றங்கள் நடந்து முடிந்தபின் குற்றவாளியைத் தேடிப்பிடித்து கூட்டில் நிறுத்துவது அதன் நோக்கமல்ல. குற்றங்கள் நிகழாதவாறு தடுத்துக் குற்றச் செயல்களற்ற ஒரு சமூகத்தைக் கட்டி எழுப்புவதே அதன் இலட்சியமாகும்” என்றார்.

இதே போலத்தான் தமிழ் மக்களுக்கென்று இன்று தனியான நீதித் துறை இருக்கிறது. பல இடங்களிலே தமிழீழ நீதி மன்றங்கள் இருக்கின்றன. இந்த நீதித்துறைக்கு பொறுப்பாக இருக்கும் பரா அவர்கள், “நாங்கள் இந்த நீதி மன்றங்களை உருவாக்கிய போது தலைவர் சொன்னார், நீதிமன்றங்கள் மக்களுக்கான நீதி மன்றங்களாக இருக்கவேண்டும். இங்கே போனால் உரிய நீதி கிடைக்கும் என்ற எண்ணம் மக்களுக்கு வரவேண்டும்” என்று. பொதுவாக நீதி மன்றங்கள் என்றாலே காலதாமதமும் பணவிரயம் இருக்கும். பெரும்பாலான சந்தர்ப்பங்களில் உரிய நீதியும் கிடைப்பதில்லை என்ற எண்ணமே மக்கள் மனதிலே இருந்தது. இன்றைக்கு தமிழீழ நீதிமன்றங்கள் அந்த எண்ணத்தை மாற்றியிருக்கின்றன. எல்லைப் பகுதிகளில் இருக்கிற சிங்கள மக்கள்கூட தங்கள் பிணக்குகளை எங்களிடம் எடுத்துவரும் அளவுக்கு எங்களுடைய நீதி மன்றங்களின் செயற்பாடுகள் சிறப்பான முறையிலே அமைந்திருக்கிறது” என்றும் கூறினார்.

உண்மையிலேயே இன்றைக்கு, தனித்துவமான தேசியக் கொடி, தனியான படையணிகள், தனித்துவமான சீருடை, தனித்துவமான மரியாதை ஒழுங்கு (சலூட்) தனியான காவல் துறை, தனியான நீதி, நிர்வாகக் கட்டமைப்புகள், தனியான ஆயப்பகுதி, தனியான தமிழீழப் போக்குவரத்துத்துறை என்று அடுக்கிக்கொண்டு போகும் அளவுக்கு எங்கும் எதிலும் எங்களது தனித்துவத்தை நமது தேசியத் தலைவர் நிறுவியிருக்கிறார்.

அகதிகள் என்றும் அரசியல் அநாதைகள் என்றும், அடையாளம் இழந்திருந்த தமிழினத்துக்கு இன்று அவர் தனித்துவமான அடையாளத்தையும், ஒரு அரசியல் முகவரியையும் பெற்றுத் தந்திருக்கிறார்.

தமிழர்கள் தனித்துவமானவர்கள். அவர்கள் அழுதுகொண்டும், தொழுது கொண்டும் வாழும் கோழைகள் அல்ல. எங்கும் எதிலும் சென்று எதையும் சாதிக்கவல்ல வீரர்கள் என்பதை அவர் உலகிற்கு உணர்த்தியிருக்கிறார். இதுவரை மற்றவர்களை பார்த்தொழுகிய (கொப்பியடித்த) எம்மை இன்று எங்களை மற்றவர்கள் பார்த்தொழுகும் நிலைக்கு நமது தேசியத் தலைவர் உயர்த்தியிருக்கிறார்.

## கடலை வென்று தரையை வென்றவர்

“கடலை வெல்பவர்களால் தான் தரையை வெல்ல முடியும்” என்று சொன்னவர் மாவீரன் நெப்போலியன் பொனபாட் கடந்த காலத்தில் இந்தக் கடல்பலத்தை வைத்துக் கொண்டுதான் ஐரோப்பிய அரசுகள் தங்களது சாம்ராட்சியங்களை விரிவுபடுத்தின. தமிழரிடம் கடல் பலம் இல்லாது இருந்ததால் தான் 1620ம் ஆண்டு 8000 கிலோமீட்டர்களுக்கு அப்பாலிருந்து வந்த போர்த்துக்கேசர்களால் யாழ்ப்பாண அரசை வீழ்த்த முடிந்தது.

# வேங்கை களம் வெல்வான்

ஆண்டில் ஒரு முறை பேசுவான்!
ஏனைப் பொழுதனைத்தும் செயலே
ஆற்றுவான்! பகைவர்
கூண்டின் சிறைமதில் தாக்குவான்!
பிரபாகரன் நெருப்பின் தானை
கூட்டுவான்! எழுவான்!
தூண்டில் புழுவெனத் துடிப்பவர்
தமிழர் துயர்களைவான்! மாற்றார்
படை துகள் செய்வான்!
வேண்டின் உலகையும் அறவழி
பிழைப்பின் எதிர்மோதி வேங்கை
களம் வெல்வான் கண்டீர்!

விரிந்த புகழ்கெட ஈழமண்
அடிமை வசைசுமந்து கூனி
வீழ்ந்தநாள் கண்முன்
எரிந்த தாயகம் பார்த்தவன்
பிரபாகரன் குமுறி எழுதல்
கண்டுளம் சிலிர்த்தோம்!
சொரிந்த குண்டுகள் இடை அவன்
நின்றான்! தமிழினத்தின் சோர்வு
நீக்கினான்! எங்கள்
சரிந்த தாயகம் நிமிர்ந்த நாள்
கண்டோம்! விடுதலை வெஞ்சமரில்
இனமானம் காத்தோம்!

வெற்றி தமிழினம் பெறுதலை
இனியார் தறுதலை எதிர்த்தல்
வெல்லுதல் கூடும்?
முற்றி வெடித்த வான்புயல் நிகர்
பிரபாகரன் படைமுன் நிற்கும்
மூச்சு யார் கொண்டார்?
சுற்றிப் பகைவிழ ஆர்த்தெழும்
புலிகள் அணிதிரளக் கண்டோம்!
சுருண்டார் மாற்றார்!
தொற்றி அடிமையராய் உயிர்
தொங்கும் இழிநிலை தொலைத்தோம்!
கூவடா சங்கே!

- காசி ஆனந்தன் -